உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# மெய்கண்டசாத்திரம்

## 3. சிவஞானபோதம்

திராவிடமாபாடிய கர்த்தராகிய

ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்

சிற்றுரையுடன்.

---

மெய்கண்டார் யாண்டு—731

விசய — தை — அசுபதி.

*திருச்சிற்றம்பலம்.*

"கயிலாய பரம்பரையிற் சிவஞான போதநெறி
காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர் மெய்ஞ்ஞான
பாநு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ் குருநமச்சி
வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் றிருமரபு நீடூழி
தழைக மாதோ"

*திருச்சிற்றம்பலம்.*

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ

பஞ்சாக்கரதேசிக பரமாசாரியசுவாமிகள்

# மகரத்தலைநாட் குருபூஜைமலர்

விசய

திருவாவடுதுறை யாதீன வெளியீடு—77.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ மெய்கண்டதேவநாயனுர் அருளிச்செய்த

# சிவஞானபோதம்

## மூலமும்.

திராவிடமாபாடிய கர்த்தராகிய

ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்

## சிற்றுரையும்.

---

திருக்கயிலாயபாம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்து

21-வது குருமஹாசந்நிதானம்

**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிகசுவாமிகள்**

கட்டளையிட்டருளியபடி

அவ்வாதீன வித்துவான்

**த. ச. மீனுட்சிசுந்தரம் பிள்ளையால்**

பரிசோதித்துப் பதிப்பிக்கப்பெற்றன.

விசய — தை — அசுபதி

**1954.**

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## மெய்கண்டதேவநாயனர் துதி.

பண்டைமறை வண்டாற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டஇரு தயகமல முகைக ளெல்லாங்
கண்திறப்பக் காசினிமேல் வந்தஅருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய் மேவு
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வாம்.

— சிவஞானசித்தியார்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பதிப்புரை.

சிவஞானபோதம் என்பது மெய்கண்டசாத்திரங்கள் பதினான்கனுள் ஒன்று. அது சாத்திரங்களுள் தலையாயது. இதனை அருளிச்செய்தவர்கள் ஸ்ரீமெய்கண்டதேவநாயனார். ஸ்ரீமெய்கண்டதேவநாயனார் அருளிய சிவஞானபோதத்துக்கு உரைகண்டார் பலர். ஸ்ரீஅருணந்திதேவநாயனார் தம் ஞானாசிரியராகிய ஸ்ரீமெய்கண்டதேவர்பால் ஞானதீட்சையும் ஞானோபதேசமுங் கேட்டு உணர்ந்து சிந்தித்தவாறே சிவஞானபோதநூலை விரித்துச் செய்யுளால் அதற்கு ஓர் நல்லுரை கண்டனர். பின்பு ஸ்ரீமெய்கண்டசந்தானத்திலே பரம்பரையாக அநுக்கிரகம்பெற்றுவந்த ஆசிரியர்கள் பலர் உரையெழுதினர். திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்துப் பிரதம பரமாசாரியசுவாமிகள்பால் அநுக்கிரகம்பெற்ற மூன்றாவது — ஸ்ரீ அம்பலவாணதேசிகமூர்த்திகள் சிந்தனையுரையைச் செய்தருளினர். அது 'சிவஞானபோதசிந்தனை' என வழங்கப்படும். 'பழையவுரை' என ஒன்றுண்டு. அவ்வுரை முன்னரே இவ்வாதீன வெளியீடாக வந்துள்ளது: சிந்தனையுரையும் விரைவில் வெளிவரவுள்ளது.

இனி, இவ்வாதீனத்தைச்சேர்ந்த பாண்டிப்பெருமாள் என்பவர் இதற்கு ஒரு விருத்தியுரையும், பதவுரையும் இயற்றினர். பதவுரையில் சில பகுதிகளே கிடைக்கின்றன. பாண்டிப்பெருமாள் விருத்தி

யுரையும் ஆதீன வெளியீடாக வெளிவரவேண்டிய நிலையில் ஆராயப் பெற்று வருகிறது. ஸ்ரீமாதவச்சிவஞானயோகிகள் சிவஞான போதத்துக்கு ஒரு சிற்றுரையும், பேருரையும் அருளிச்செய்தார்கள். திராவிடமாபாடியம் என்பது அப் பேருரையேயாம்.

இனி, ஸ்ரீமாதவச்சிவஞானயோகிகள் அருளிச்செய்த சிற்றுரை பேருரைகளைக் கற்கத்தொடங்குமுன் சிவஞானசித்தியாருக்கு சுவாமிகள் இயற்றியருளிய பொழிப்புரையை நன்கு கற்றுணரவேண்டும். இச்சாத்திர உரைகளிலே சுவாமிகள் தாம் காட்டும் அரிய இலக்கணநுட்பங்களைச் செவ்வே மாணவர் உளங்கொளக் கற்குமாறு தாமே நன்னூலுக்கு ஒரு விருத்தியுரையும், தொல்காப்பியத்துக்குப் பாயிரவிருத்தி — முதற்சூத்திரவிருத்திகளும் செய்தருளினர். சிறிதளவாவது தர்க்க நூலறிவும் சாத்திர நூல் கற்போருக்கு வேண்டுமே எனத் திருவுளங்கொண்டு 'தர்க்க சங்கிரகம்—அன்னம்பட்டருரையைத் தமிழில் மொழிபெயர்த்தருளினர். நன்னூல் விருத்தியுரையைக் கற்குமுன் ஒருதலையாக 'இலக்கணக்கொத்து, பாயிரவிருத்தி, முதற்சூத்திர விருத்திகளைக் கற்றுணரவேண்டும்' என்பதை இவ்வாதீனத்திலே முறையாகக் கல்விகற்றோர் யாவரும் அறிவார். சாத்திரநூல்களையும் உரைகளையும் கற்கப்புகுமுன் அந்தந்த நூல்களைக் கற்கும் முறையிலே ஞான தீட்சையும் ஞானோபதேசங்களும் பெறுதல் இன்றியமையாதது. தீட்சைகளையும் ஞானோபதேசங்களையும் பெறுதல் சுமையெனவோ? வேண்டா எனவோ? கருதுவோர் ஞானநூல்களைப் படித்தலால் யாதொரு பயனையும் பெறார். அதுபோலவே, கருவி நூல்களாகிய இலக்கண—இலக்கிய நூல்களையும் தர்க்கநூலையும் இகழ்ந்தார்க்கு ஞானநூல் நன்கு விளங்குமாறில்லை என்க.

"திருவாவடுதுறையாதீனத்து மஹாவித்துவானாகிய திரிசிரபுரம்-ஸ்ரீ **மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள்** பூதவுடலை நீத்த பின்பு அவர்களுடைய மாணாக்கர்கள் அவர்களை ஆதரித்து வந்தவர்களும், ஷை ஆதீனத்து 16-ஆம் பட்டத்து ஞானாசிரியாராக விளங்கியவர்களுமான ஸ்ரீ-ல-ஸ்ரீ **சுப்பிரமணிய தேசிகரவர்கள்**பால் தத்தம் தகுதிக்கேற்ப நூல்களைப் பாடங்கேட்டு வருவாராயினர். அவர்களுள் மேலகரம் **ஸ்ரீ சண்பகக் குற்றாலக் கவிராயரவர்களும்** யானும் நன்னூல் விருத்தியுரையைப் படிக்க விரும்பியபொழுது **சுப்பிரமணியதேசிகரவர்கள்**, "விருத்தியுரை முதலிற் **சங்கர நமச்சிவாயரால்** இயற்றப்பட்டிருந்தது; அப்பாற் **சிவஞானபோதப் பேருரை** (திராவிடமகாபாஷ்யம்) முதலியவற்றில் தம்மால் அமைக்கப்பெற்றுள்ள அரிய வடமொழி தென்மொழிப் பிரயோகங்களை எளிதிற் பிற்காலத்தவர்க்குப் புலப்படுத்த நினைந்து **இலக்கணக்கொத்து, தொல்காப்பியச் சூத்திரவிருத்தி, இலக்கணவிளக்கச்சூறாவளி** யென்னும் நூல்களிலும் பிறவற்றிலுமுள்ள முக்கியமான சில சிலவற்றை உரிய இடங்களிற்கூட்டியும் குறைத்தும் மாற்றியும் **ஸ்ரீ சிவஞானயோகிகளால்** இவ்வுரை செப்பம்செய்யப்பெற்று **விருத்தியுரையென** வழங்கலாயிற்று; இங்ஙனம் ஒருரைக்குப்பின் கூட்டியும் குறைத்தும் பிற்காலத்தார் விளக்கி எழுதியுள்ள உரைகளை வடமொழியிற் பாரக்கக்காணலாம். **இலக்கணக்கொத்து** முதலிய மூன்றையும் முறையே படித்த பின்பு பாடங்கேட்டால்தான் விருத்தியுரை நன்கு புலப்படும். இங்கு இவ்வுரையைப் பாடம் கேட்கும் முறை இதுவே" என மஹாமஹோபாத்தியாய ஸ்ரீமத் ஐயரவர்கள் (சங்கரநமச்சிவாயருரை முகவுரையில்) கூறியுள்ளமை இதனை வலியுறுத்தும்.

இனி, "நின்று பேசலாம், இருந்து சொல்லுதலும் திருந்த நூலை ஆராய்ந்து அச்சிடுதலும் இயலாது" என ஸ்ரீமத் மகாமகோபாத்தியாய ஐயரவர்கள் அடிக்கடி சொல்லுவதுண்டு. அவர்கள் சொல்லுவதற்குப் பொருள் நெடுங்காலம் விளங்கவில்லை. பின்பு ஒரு காலத்திலே அதனை விளக்கியருளினார்கள். அஃது இஃதாம்:— ஏதாவதொன்றைச் சபையோர் தெவிட்டாமல் சொல்லி அமையலாம். ஆனால், நிறைந்த புலமையிருந்தாலன்றி ஒரு நூலை முறையாக இருந்து பாடம் சொல்லுதலும், ஏடுகளிலிருந்து பெயர்த்துச் சுத்த பாடம் கண்டு ஆராய்ந்து அச்சிடுதலும் முடியாது. அவைகளால் உண்டாகும் சிரமம் இவ்வளவு அவ்வளவன்று என்பதே அது. அடியேன் அநுபவத்திலே காணுங்காலம் இவ்வாதீனத்திலே அப்பணிகள் வாய்த்தபின்தான் உண்டாயிற்று. 'நிறைமொழிமாந்தர்' கூறியதல்லவா? என அதனை நன்கு உணர்ந்தேன்; அஞ்சினேன். பாடஞ்சொல்வதும் உரைவரைவதும் எளிதன்று என்பதைக் கற்றோரேயன்றி மற்றோரறியார். சற்சனர் இதனை எளிதில் விளங்கிக்கொள்வர்.

இனி, சிவஞானபோதத்துக்கு ஸ்ரீமாதவச்சிவஞானயோகிகள் அருளிச்செய்த சிற்றுரையைப் பலர் ஆராய்ந்து வெளியிட்டுள்ளனர். பல பதிப்புக்களும் வெளிவந்துள. ஸ்ரீமெய்கண்டதேவநாயனார், ஸ்ரீமாதவச்சிவஞானயோகிகள் வரலாறுகளும் அவைகளைப்பற்றிய ஆராய்ச்சிகளும் பல வந்துள்ளன. ஆகலின், இப்பதிப்பிலே அவைகளை எழுதிலேன். சிற்றுரையில் வந்துள்ள இலக்கணக்குறிப்புக்களையும், இன்றியமையாத பரிபாஷைகளையும், அரும்பொருட் குறிப்புக்களையும் தொகுத்து ஆராய்ந்து வெளியிடுவதாயின்மிகச்சுருங்கிய கால அளவிலே செய்து முடித்தல் இயலாததொன்றாம் எனக் கருதி அதிலும் தலையிட்டிலேன்.

சிவஞானிகளாலும், மகாவித்துவான்களாலும் ஆராய்ந்து வெளியிடவேண்டிய இப்பெருநூலின் சிற்றுரை—பேருரைகள் எளியேன் பெற்ற சிற்றறிவுக்குச் சிறிதும் இயலாததாகலின், ஒருவாறு இச்சிவஞானபோதத்தைச் சிற்றுரையுடன் அச்சிட்டுப் பாதுகாத்ததொன்றே அடியேன் இப்பதிப்பிற் செய்த பணியாம். பெரியோர்களால் நன்கு ஆராயப்பட்ட பலவகையான ஆராய்ச்சிக்குறிப்புக்களுடன் இச்சிற்றுரை பின்பு வெளிவரலாம் என்னும் துணியும் உடையேன். இம்மட்டிலே இதனை அச்சிட்டு ஆதீன வெளியீடாக வரச்செய்த திருவருளையும் குருவருளையும் சிந்தித்திருத்தலன்றி வேறறியேன்.

இவ்வாதீனத்து 21-வது குருமகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ **சுப்பிரமணியதேசிகமூர்த்திகள்** கட்டளையிட்டருளியபடி இவ் விசய ஆண்டு மகாத்தலைநாட் குருபூசைத் துவசாரோகண நாளில் **திருமந்திரம் – கயிலாயசித்தர் உரையும்**, குருபூசை நாளாகிய இன்று **சிவஞானபோதச்சிற்றுரையும்** வெளிவந்தன. இவை சைவப்பெருமக்களுக்குச் சிறந்த விருந்தாக அமைந்துள்ளன. ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தின் பெருங்கருணையைச் சைவப்பெருமக்கள் அனைவரும் சிந்தித்து வந்தித்து வாழ்த்தும் கடப்பாடுடையார். இதிற் காணப்படும் பிழைகளை அறிஞருலகம் பொறுத்தருளும்படி பன்முறை வேண்டிக்கொள்ளுகின்றேன்.

இங்ஙனம்.

திருவாவடுதுறை
9—2—54.

சித்தாந்தசைவமணி—
**த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை,**
ஆதீன வித்துவான்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சூர்ணிக்கொத்து.



## முதற்சூத்திரம்.

1. சகம் பிறப்பிருப்பிறப்பாகிய முத்தொழிலையுடையது.
2. அது அரனாலே உடையது.
3. மற்றிருவரும் முத்தொழிற்படுவர்கள்.

## இரண்டாஞ்சூத்திரம்.

1. அரன் உயிர்களின் இரண்டற நிற்பன்.
2. உயிர்களுக்குக் கன்மபலனை அரனே கொடுப்பன்.
3. உயிர்கள் அச்சு மாறியே பிறக்கும்.
4. அரன் சருவ வியாபகன்.

## மூன்றாஞ்சூத்திரம்.

1. இல்லையென்கிற அறிவுடனே சொல்லுகையினாலே அறிவுயிர் உண்டு.
2. எனது உடல் என்று பொருட்பிறிதின்கிழமையாகச் சொல்லுகையினாலே, உடற்கு வேறாய் உயிருண்டு.
3. ஐந்தையும் ஒருவனே அறிதலின், ஒவ்வொன்றை மாத்திரம் அறிகிற ஐந்திற்கு வேறாய் உயிர் உண்டு.

4. கனவுடலை விட்டு நனவுடலிலே வருகையினாலே, அக் கனவுடற்கு வேறாய் உயிர் உண்டு.

5. நித்திரையிலும் பிராணவாயுத் தொழில் பண்ணவுஞ் சரீரத்துக்குப் புசிப்புந் தொழிலும் இல்லாதபடியினாலே, பிராணவாயுவுக்கு வேறாய் உண்டு.

6. மறந்து மறந்து நினைக்கிறபடியினாலே மறவாமல் இருக்கிற அரனுக்கு வேறாய் உயிர் உண்டு.

7. எல்லாத்தத்துவங்களுக்கும் வேறு வேறு பெயர் இருக்கையினாலே, அந்தந்தத் தத்துவங்களுக்கு வேறாய் உயிர் உண்டு.

## *நான்காஞ்சூத்திரம்.*

1. அந்தக்கரணங்களுக்கு உயிர் உட்கூடினா லன்றித் தொழில் இல்லாதபடியினாலே, அந்தக்கரணங்களுக்கு வேறாய் உயிர் உண்டு.

2. மலமறைப்பால் உயிருக்கு அறிவு இல்லை.

3. உயிர் மூன்றவத்தைப்படும்.

## *ஐந்தாஞ்சூத்திரம்.*

1. உயிராலேதத்துவங்களெல்லாந் தொழில் செய்யும்.

2. அரனாலே உயிர்களெல்லாம் அறியும்.

## *ஆறாஞ்சூத்திரம்.*

1 உயிரறிவினாலே அறியப்பட்டதெல்லாம் அழியும்.

2. அப்பிரமேயமாக அறியப்பட்டவனே அரன்

## ஏழாஞ்சூத்திரம்.

1. அரன் பாசத்தை அநுபவியான்.

2. பாசம அரனை அநுபவியாது.

3. உயிர் அவ்வரனை அடையும்; அநுபவிக்கும்.

## எட்டாஞ்சூத்திரம்.

1. உயிருக்கு நல்லறிவு தவத்தினுலேயே வரும்.

2. உயிருக்குச் சற்குருவாய் வருவது அரனே.

3. உயிர் பஞ்சேந்திரியங்களைப் பற்றுகையினுலே தன்னை யும் அறியமாட்டாது.

4. உயிர் பஞ்சேந்திரியங்களிலே பற்றற்ருல் தன்னையும் அறியும்.

## ஒன்பதாஞ்சூத்திரம்.

1. உயிர் அரன் ஞானத்தினுலேயே அரனைக் காணும்.

2. உயிர் பாசத்திலே பற்றற்ருல், அரன் வெளிப்படுவன்.

3. பஞ்சாக்ஷரசெபம் பண்ணினுல், வாசனுமலம்போம்.

## பத்தாஞ்சூத்திரம்.

1. அரனுடன் ஒன்ருகி நில்.

2. உன் தொழிலெல்லாம் அரன் பணி என்று கொள்.

## பதினொராஞ்சூத்திரம்.

1. ஞானிக்கு வருகிறவிடயங்களை அரனே அநுபவிப்பன்.
2. அரனை மறவாமல் அன்பு இருந்தால் அவனிடத்திலே ஐக்கமாய்ப் போவன்.

## பன்னிரண்டாஞ்சூத்திரம்.

1. மும்மலங்களையுங் களைக.
2. சிவஞானிகளுடனே கூடுக.
3. சிவஞானிகளையுஞ் சிவலிங்கத்தையுஞ் சிவனெனவே தேறி வழிபடுக.
4. வழிபடாமையை ஒழிக.

ஆக சூத்திரம் 12-க்குச் சூர்ணிக்கொத்து-39.

முற்றுப்பெற்றது.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பொருளடக்கம்.

—o—


மலர்தலையுலகின் — பாயிரம் ... 3

கலலானிழன்மலை — மங்கலவாழ்த்து ... 8

தம்மையுணர்ந்து—அவையடக்கம் ... 9

## க. பொதுவியல்பு—1. பிரமாணவியல்

1. முதற்சூத்திரம் : *அவனவளது* ... 13

முதல் அதிகரணம் : ... 16

1. *பூதாதியீறு* 1 ... 17

இரண்டாமதிகரணம் : ... 19

1. *இலயித்ததன்னி* 2 ... 21
2. *வித்துண்டாமூல* 3 ... 24
3. *நோக்காது நோக்கி* 4 ... 26

மூன்றாமதிகரணம் : ... 28

1. *ஒன்றலாவொன்று* 5 ... 29

2. இரண்டாஞ்சூத்திரம் : *அவையேதானே* 35

முதல் அதிகரணம் : ... 37

1. *கட்டுமுறப்புங்* 6 ... 39

| | | | |
|---|---|---|---|
| 2. ஒன்றென்றதொன் | 7 | ... | 40 |
| 3. பண்ணையுமோசை | 8 | ... | 41 |
| 4 அரக்கொடுசேர்த்தி | 9 | ... | 42 |
| இரண்டாமதிகரணம் : | | ... | 44 |
| 1. உள்ளதேதோற்ற | 10 | ... | 46 |
| 2. அவ்வினையைச் | 11 | ... | 47 |
| 3. செல்லிற்குமியு | 12 | ... | 48 |
| மூன்றாமதிகரணம் : | | ... | 51 |
| 1. கண்டநனவைக் | 13 | ... | 53 |
| 2. அரவுதன்றோலுரி | 14 | ... | 56 |
| நான்காமதிகரணம் : | | ... | 58 |
| 1. எங்குமுள னென்றளவை | 15 | ... | 59 |
| 3. மூன்றாஞ்சூத்திரம் : உளதிலதென்றலி | | ... | 67 |
| முதல் அதிகரணம் : | | ... | 68 |
| 1. அன்றன்றென | 16 | ... | 70 |
| இரண்டாமதிகரணம் : | | ... | 71 |
| 1. எனதென்றமாட்டி | 17 | .. | 73 |
| மூன்றாமதிகரணம் : | | ... | 74 |
| 1. ஒன்றுமிந்தொன்ற | 18 | ... | 75 |
| நான்காமதிகரணம் : | | ... | 76 |
| 1. அவ்வுடலினின்று | 19 | ... | 77 |

ஐந்தாமதிகரணம் : ... 79
1. *கண்டறியுமிவ்வுட* 20 ... 81
ஆறுமதிகரணம் : ... 82
1. *அறிந்துமறிவதே* 21 ... 83
ஏழாமதிகரணம் : ... 86
1. *கலையாதிமண்* 22 ... 87

## 2. இலக்கணவியல்

4. நான்காஞ்சூத்திரம் : ***அந்தக்கரண*** ... 91
முதல் அதிகரணம் : ... 94
1. *மனமாதியா* 23 ... 96
2. *சிந்தித்தாய்ச்சித்த* 24 ... 98
3. *அகாரவுகாரமகங்* 25 99
4. *எண்ணிலவோங்கா* 26 ... 101
இரண்டாமதிகரணம் : ... 102
1. *மாயாதனுவிளக்* 27 ... 103
மூன்றுமதிகரணம் : ... 106
1. *ஒன்றணையாமூலத்* 28 ... 108
2. *இலாடத்தேசாக்கி* 29 ... 110
5. ஐந்தாஞ்சூத்திரம் : ***விளம்பியவுள்ளத்*** ... 115
முதல் அதிகரணம் : ... 117

| | | | |
|---|---|---|---|
| 1. *ஐம்பொறியையாண்ட* | 30 | ... | 118 |
| இரண்டாமதிகரணம் : | | ... | 119 |
| 1. *மன்னுசிவன்* | 31 | ... | 120 |
| 2. *வெய்யோனொளியி* | 32 | ... | 122 |
| 3. *அருளுண்டாமீசற்* | 33 | ... | 123 |

6. ஆறுஞ்சூத்திரம் : **உணருருவசத்தெனி** ... 127

| | | | |
|---|---|---|---|
| முதல் அதிகரணம் : | | ... | 130 |
| 1. *அசத்தறியாய் கேணீ* | 34 | ... | 131 |
| இரண்டாமதிகரணம் : | | ... | 134 |
| 1. *எண்ணிய சத்தன்* | 35 | ... | 136 |
| 2. *உணர்பவசத்தாதல்* | 36 | ... | 137 |
| 3. *பாவகமேற்றனசத்* | 37 | ... | 139 |
| 4. *அறிய விரண்டல்ல* | 38 | ... | 140 |
| 5. *அது வென்னுமொன்* | 39 | ... | 142 |


## உ. சிறப்பியல்பு—3. சாதனவியல்.


7. ஏழாஞ்சூத்திரம் : **யாவையுஞ்சூனியஞ்** ... 147

| | | | |
|---|---|---|---|
| முதல் அதிகரணம் : | | ... | 149 |
| 1. *அங்கியமிலாமை* | 40 | ... | 151 |
| இரண்டாமதிகரணம் : | | ... | 152 |
| 1. *பேய்த்தேர்நீரென்று* | 41 | ... | 153 |

மூன்றாமதிகரணம் : ... 154
1 அருவுருவந்தானறி 42 ... 157
2. மயக்கமதுற்று 43 ... 159
3. மெய்ஞ்ஞானந்தன்னில் 44 ... 161

8 எட்டாஞ்சூத்திரம் : ஐம்புலவேடரி ... 165

முதல் அதிகரணம் : ... 167
1. தவஞ்செய்தாரென்று 45 ... 169
2 பசித்துண்டு பின்னும் 46 ... 170
இரண்டாமதிகரணம் : ... 173
1. மெய்ஞ்ஞானந்தானே 47 ... 174
2. அறிவிக்கவன்றி 48 ... 176
3. இல்லாமுலைப்பா 49 ... 177
மூன்றாமதிகரணம் : ... 179
1. பன்னிறங்காட்டும் 50 ... 180
நான்காமதிகரணம் : ... 182
1. சிறை செய்ய 51 ... 183
2. எவ்வுருவுந்தான் 52 ... 184
3. ஐம்பொறியி 53 ... 186

9. ஒன்பதாஞ்சூத்திரம்: ஊனக்கண் பாச ... 191

முதல் அதிகரணம் : ... 193
1. நாடியேோவெண்போ 54 ... 194
2. காட்டிய கண்ணே 55 ... 196

| | | | |
|---|---|---|---|
| இரண்டாமதிகரணம் : | | ... | 197 |
| 1. நிர்க்குணனாய் | 56 | ... | 199 |
| 2. சுட்டியுணர்வத | 57 | ... | 200 |
| 3. கண்டதையன்றன் | 58 | ... | 202 |
| மூன்றாமதிகரணம் : | | ... | 204 |
| 1. அஞ்செழுத்தாலுள் | 59 | ... | 206 |
| 2. இந்துவிற்பானுவி | 60 | ... | 207 |
| 3. மண்முதலை | 61 | ... | 209 |


## 4. பயனியல்.


| | | | |
|---|---|---|---|
| 10. பத்தாஞ்சூத்திரம் : *அவனே தானே* | | ... | 215 |
| முதல் அதிகரணம் : | | ... | 217 |
| நானவனென்றெ | 62 | ... | 218 |
| இரண்டாமதிகரணம் : | | ... | 222 |
| 1. நாமல்ல விந்திரிய | 63 | ... | 224 |
| 2. சார்ந்தாரைக்கா | 64 | ... | 225 |
| 3. இங்குளிவாங் | 65 | ... | 227 |
| 4. நண்ணனல் வேவா | 66 | ... | 229 |
| 5 சதசத்தா மெய் | 67 | ... | 230 |
| 11. பதினோராஞ்சூத்திரம்: *காணுங்கண்ணுக்கு* | | | 235 |
| முதல் அதிகரணம் : | | ... | 240 |
| 1. ஐந்தையுமொக்க | 68 | ... | 243 |
| 2 எகமாய் நின்றே | 69 | ... | 244 |

| | | | |
|---|---|---|---|
| இரண்டாமதிகரணம் : | | ... | 246 |
| 1. அருக்கனேர் | 70 | ... | 248 |
| 2. மன்னுமிருளை | 71 | ... | 249 |
| 3. நசித்தொன்றி | 72 | ... | 251 |
| 4. பொன்வாண்முன் | 73 | ... | 252 |
| 12. பன்னிரண்டாகு : செம்மலர் நோன்றாள் | | | 257 |
| முதல் அதிகரணம் : | | ... | 259 |
| 1 புண்ணிய பாவ | 74 | ... | 260 |
| இரண்டாமதிகரணம் : | | ... | 262 |
| 1. மறப்பித்து | 75 | ... | 263 |
| மூன்றாமதிகரணம் : | | | 265 |
| 1. தன்னுணர | 76 | ... | 267 |
| 2. கண்டதொரு | 77 | ... | 268 |
| நான்காமதிகரணம் : | | | 270 |
| 1. அதுவிதுவென்ற | 78 | ... | 271 |
| 2. வினையாலசத்து | 79 | ... | 273 |
| 3. தன்னையறிவித்து | 80 | ... | 274 |
| 4. சிவனெனுமந்தநர | 81 | ... | 276 |

ஆக சூத்திரம் 12-க்கு அதிகரணம்-39

திருவெண்பா-81

---

| | | |
|---|---|---|
| எந்தை சனற்குமார | ... | 278 |

---

| | | |
|---|---|---|
| வெளிப்படை..... உரை | ... | 279- |

உ

# சிவஞானபோதம்

## சூத்திரக் கருத்து

முதற்பதி அரனே ஐந்து முன்னைத்து விதமி ரண்டே
இதற்பினை அனுமா னத்தால் எண்ணிலா உயிர்கள் மூன்றே
அதற்பினை அவத்தை நான்கே அகமறுத் திடலே ஐந்தே
செகற்பதி பிரித்த லாறே தெரிவித்தல் உயிரை ஏழே.

மறைப்பினை நீக்கி ஞான வாரியை நினைத்தல் எட்டே
சிறப்புடை உபாயந் தம்மால் தெளிவித்தல் உயிரை ஒன்பான்
அறுத்திடல் மலங்கள் பத்தே அழுந்தலே சிவத்தில் ஒன்றே
திறப்பணி கொளலி ரண்டே சிவஞான போதஞ் சித்தி.

—ஈசாணதேசிகர் : தசகாரியம்.

## அதிகரண வெண்பாத் தொகை

ஐயொருப தேழேழும் ஆங்கமைந்த நாலாறும்
ஐயொன்ப தோரெட்டோ டாறாறும் — ஐயவெட்டோ
டெண்பத்து மொன்றுஞ் சிவஞான போதத்தின்
மன்னருளும் வெண்பா வகை.

## சூரணி—முதலியவற்றின் தொகை

சூத்திரமீ ராறினுக்குச் சூரணிமுப் பானொன்பான்
ஏற்றவெண்பா வெண்பா னிரண்டனைத்துஞ் — சேர்த்ததொகை
நூற்றுமுப்பான் மூன்றிவற்றை நுண்ணுணர்வி னுய்ந்துணர்ந்தோர்
வேற்றுருக்கொள் ளாருறுவர் வீடு.

## சூர்ணித்தொகை

மூன்றுநான் கேழு மூன்றே முடிந்தபின் இரண்டி ரண்டே
மூன்றுநான் மூன்று நன்றாய் முடிந்தபின் இரண்டி ரண்டே
என்றநான் கீறு தாமே இவையீரா றிலக்கத் துள்ளே
என்றமுப் பானொன் பானை எனக்கான் இரங்கி னானே.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# சிவஞானபோதம்

## மூலமும் சிற்றுரையும்

---

### பாயிரம்.

சைவாகமங்களினுளவாகிய நாற்பாதங்களுள் வைத்து ஞானபாதத்தோதிய பொருள்களை யாராயும் ஆராய்ச்சி இந்நூலின்கணெடுத்துக்கொள்ளப்பட்டது. இது கேட்டலுறுவார்க்கு இதனாற்போந்த பயன் யாதோவெனவும், இது கேட்டற்குரியார் யாவரெனவும், இதனானுதலப்படும் பொருள் யாதெனவும், இதனைப் பயப்பிக்குங்கருவியாய் இதற்கு முன் ஒருதலையா னுணர்தற்பால தியாதெனவும், இதனை வழங்குதற்கிட்ட பெயர் யாதெனவும், இஃதியாண்டு வழங்குவதெனவும், இதன் முதனூல் யாதெனவும், இந்நூல் செய்தார் யாவரெனவும், பலவாற்றா னைசங்கை நிகழுமன்றே; அவ்வாசங்கை நீங்கி மனவெழுச்சி சேறற்பொருட்டு இந்நூன்முகத்துரைக்கப்படுவதாகிய சிறப்புப்பாயிரம் :—

மலர்தலை யுலகின் மாயிரு டுமியப்
பலர்புகழ் ஞாயிறு படாஅ தல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போ லீண்டிய
பெரும்பெயர்க் கடவுளிற் கண்டுகேண் ணிருடீர்ந்

தருந்துயர்க் குரம்பையி னான்மா நாடி
மயர்வற நந்தி முனிகணத் தளித்த
வுயர்சிவ ஞான போத முரைத்தோன்
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணைச் சுவேதவனன்
பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன்
பவநனி வன்பகை கடந்த
தவரடி புனைந்த தலைமை யோனே.

—என வரும்.

இதன்பொருள்:- *மலர் தலை உலகின் மா இருள் துமியப் பலர் புகழ் ஞாயிறு படரின் அல்லதைக் காண்டல் செல்லாக் கண்போல் என்பது – விரிந்தவிடத்தையுடைய ஞாலத்தின்கண்ணே துன்னிய பெரிய புறவிருள் கெடும்படி பல சமயத்தாரானும் புகழப்படுகின்ற பரிதியங்கடவுள் உதயகிரியினின்றும் போந்தாலன்றிக் காட்சி யெய்தமாட்டாத கண்ணொளி போல,—அருந்துயர்க் குரம்பையின் ஆன்மா நாடி எ—து. பொறுத்தற்கரிய துயரங்களுக்கெல்லாம் ஒரு நிலைக்களமாய்ச் சத்ததாதுக்களாற் பொத்திய குரம்பையாகிய காணப்பட்ட உடம்பானே காணப்படாத ஆன்மாவையும் பரமான் மாவையும் அனுமான வளவையான் வைத்தாராய்ந்து அவற்றது தடத்தலக்கணமெனப்படும் பொதுவியல்புணர்ந்து,—கண் இருள் தீர்ந்து எ—து. அவ்வுணர்ச்சியானே கருதியுணரப்படும் அகவிருளாகிய ஆணவமலத்தினின்று நீங்கி,—ஈண்டிய பெரும் பெயர்க் கடவுளிற் கண்டு எ—து. அது நீங்கிய வழி எல்லா நூல்களுந் தன்பொருளேயாகத் திரண்டு கூடிய பெரும்பெயரெனப்படும் ஒரு வார்த்தையாகிய மகாவாக்கியத்தான் எடுத்தோதப்படும் முதற் கடவுளது திருவருளானே அப்பொருள்களது சொரூபலக்கண மெனப்படுஞ் சிறப்பியல்பை அநுபூதியிற் கண்டுணர்ந்து,—மயர்வு அற எ—து. இம்முறையானே மயக்கவாசனையற்றுச் சிவாநுபவம்*

பெறுதற்பொருட்டு,—நந்தி முனி கணத்து அளித்த எ—து. ஸ்ரீகண்ட தேவர்பாற் கேட்டருளிய நந்திபெருமான் சனற்குமாரமுனிவன் முதலிய முனிவர்கணங்கட்கு முறையானே அளித்தருளப்பட்ட,— உயர் சிவஞானபோதம் எ—து. சரியை முதலிய மூன்று பாதப் பொருள்களை ஆராயு நூல்களின் மேற்பட்ட சிவஞானபோதமென் னும் வடநூலை,—உரைத்தோன் எ—து. மொழிபெயர்த்துக் கூறி வார்த்திக மெனப்படும் பொழிப்புரை செய்தோன்,—பெண்ணைப் புனல்சூழ் வெண்ணைச் சுவேதவனன் எ—து. பெண்ணையாற்று நீராலே சூழப்பட்ட திருவெண்ணெய்நல்லூரின் அவதரித்தருளிய சுவேதவனப்பெருமா ளென்னும் பிள்ளைத்திருநாம முடையான்,— பொய் கண்டு அகன்ற மெய்கண்டதேவன் எ—து. பொய்ச்சமயங் களின் பொருள் இதுவிதுவென்று கண்டுகழிப்பித்த காரணத்தாற் பெற்ற மெய்கண்டதேவனென்னுஞ் சிறப்புத்திருநாமமுடையான்,- பவம் நனி வன்பகை கடந்த தவர் அடி புனைந்த தலைமையோன் எ—து. பிறவியாகிய மிக்க வலிய பகையினை வென்ற தவத்தோர் தனது திருவடியைப் புனைந்துகோடற்கேதுவாகிய தலைமைப்பாட் டினையுடையோன் என்றவாறு.

படரிற் காண்டல்செல்லுங் கண்ணெனற்பாலதனை எதிர்மறை முகத்தாற் கூறினார், இன்றியமையாமை விளக்குதற்கு. இப் பொருள்பற்றிக் கண்மேல் வைத்துக் கூறினாரேனும், உவமேயப் பொருட்கேற்பக் காண்டல்சேறற்குப் படர்ந்த ஞாயிறுபோலென் பது கருத்தாகக் கொள்க.

இருட்கேட்டிற்கும் நிருவிகற்பஞ் சவிகற்பமென்னும் இரு வகைக்காட்சிக்கும் ஞாயிறு இன்றியமையாச் சிறப்பிற்றாயவாறு போல, மலத்தீர்விற்கும் ஆராய்ச்சி அநுபூதி யென்னும் இருவகை யுணர்விற்கும் இன்றியமையாச் சிறப்பிற்றாயது இந்நூலென்பார், தமியப் படரினல்லதைக் காண்டல் செல்லாக் கண்போ னுடித் தீர்ந்து கண்டு மயர்வற வளித்த சிவஞானபோதமென்றார்.

தலைமைபற்றி அருந்துயர்க்குரம்பையினென்றாரேனும், இனம் பற்றிக் கரணம் புவன முதலியனவும் உடன் கொள்ளப்படும்.

அருந்துயர்க் குரம்பையி னுடப்படுவதாகிய பொதுவியல்பு முன்னூறு சூத்திரத்தானும், பெரும்பெயர்ப்பொருளிற் காணப்படுவ தாகிய சிறப்பியல்பு பின்னூறு சூத்திரத்தானு மோதுப.

நாடியெனவே அநுமானவளவையானென்பதூஉம், கண்டென வே அநுபூதியிலென்பதூஉம் தாமே போதரும்.

பொதுவியல்பு அளவைமுகத்தானும் இலக்கணமுகத்தானுங் கூறப்பட்டுக் கேட்டல் சிந்தித்தல் என்னும் இருதிறத்தானுணரப் படும்; சிறப்பியல்பு சாதனமுகத்தானும் பயன்முகத்தானுங் கூறப் பட்டுக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டையென்னு நான்கு திறத்தானுணரப்படும்.

இஃதென் சொல்லியவாறோவெனின்:— இவ்விருவகையியல் பும் வேறு வேறு கூறும் ஆகமங்களின் பொருளொருமை உணரா மாட்டாது ஒரோவொன்றேபற்றி ஐக்கவாத முதற் பலதிறத்தான் வேறுபட்டுத் தம்முண் மாறுகொண்டு மயங்குவார்க்கு அங்ஙன மயங் காது அவற்றின் பொருளொருமை யுணர்தற்கு எழுந்தது இந்நூல் என்றவாறாயிற்று. சிவஞானபோதமென்பதூஉம் இக்காரணத்தாற் பெற்ற பெயரென்பது வடமொழிச் சிவஞானபோதத் திறுதிச் சூத்திரத் தோதியவாறுபற்றி யுணர்க.

· சரியை முதலிய மூன்று பாதப்பொருளை ஆராயுநூல்களாவன சோமசம்புபத்ததி முதலாயின. அந்நூல்களின் மேற்பட்ட சிவஞானபோதமெனவே, அந்நூல்க ளுணர்ந்தபின்னர் இந்நூல் கேட்கற்பாற்றென்பது பெறப்பட்டது; படவே, முன்னர்த் தீக்கை யுற்றுச் சிவாகமங்களையோதி அதன்பின்னர்ச் சரியாபாத முதலிய வற்றை ஆராயு நூல்களை முறையே கேட்டு அவ்வாறொழுகி மனந் தூயராய் நித்தியாநித்தியவுணர்வு தோன்றிப் பிறவிக்கஞ்சி வீடு

பேற்றின் அவாமிக்குடையாராய் வந்த அதிகாரிகளுக்கு இந்நூல் உணர்த்துக வென்பது போந்தபொருளெனக் கொள்க.

உயர் சிவஞானபோதமெனவே யாப்பும், கேட்போரும், நுதலிய பொருளும், நூற்பெயரும், காடித் தீர்ந்து கண்டு மயர்வற வெனவே நுதலிய பொருளின்வகையும், பயனும்; நந்திமுனிகணத் தளித்த வெனவே வழியும்; வெண்ணெய்ச்சுவேதவனன் மெய்கண்ட தேவனெனவே ஆக்கியோன் பெயரும், தமிழ் வழங்குநிலமே இந் நூல் வழங்குநிலமென எல்லையும் போந்தவாறுணர்க.

வடநூலார்யாப்பை ஆனந்தரியமென்றும், நுதலிய பொருளை விடயமென்றும், கேட்போரை அதிகாரிகளென்றும், பயனைப் பிர யோசனமென்றுங் கூறுப. யாப்புச் சம்பந்தமென்பாருமுளர்.

பாயிரம் முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

---

## மங்கலவாழ்த்து.

---

### கடவுள்வணக்கம்

காமிகமுதலிய சைவாகமங்களுண் ஞானபாதத்தினுள தாகிய ஆசங்கை நீக்கி அவற்றின் பொருளுண்மை பொது வியல்பு சிறப்பியல்பென்று இருவேறு வகைப்படுத்துக் காட் டிப் போதித்தற்கு இரௌரவாகமத்தினெழுந்த சிவஞான போதநூலினைத் தமிழுலகுமுய்தற்பொருட்டு மொழிபெயர்த் துச்செய்து பொழிப்புரைப்பா னெடுத்துக்கொண்ட வாசிரி யர், சாக்கிரத்தே அதீதத்தைப் புரியுந் தமக்கு இடையூறு சிறிது மணுகாமை அறிந்தாராயினும், ஆன்றோ ராசாரம்

பாதுகாத்தற்பொருட்டும், மாணுக்கர்க்கறிவுறுத்தற்பொருட்டும், முதற்கண் இடையூறு நீக்குதற்குரிய விநாயகக்கடவுளை வாழ்த்துவதாகிய மங்கலவாழ்த்துக் கூறுகின்றார்.

கல்லா னிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே.

இதன்பொருள். கல்லால் நிழல் எ—து. அருள்வடிவாகிய கல்லானிழலின்கண்ணே எழுந்தருளியிருந்து,—மலைவு இல்லார் எ—து. நந்திபெருமானுக்கு இந்நூலான் மலைவு தீர்த்தருளிய முதலாசிரியர், அருளிய எ—து. மேன்மேற் கருணைகூர்ந்தருளுதற்பொருட்டு,—பொல்லார் இணை மலர் எ—து. பொல்லாதபிள்ளையாருடைய ஞானசத்தி கிரியாசத்தியென்னும் இரண்டு திருவடித்தாமரைகளை,—நல்லார் எ—து. கேட்டுச் சிந்தித்துத் தெளிந்த மெய்யன்பர்,—புனைவரே எ—து. தம்முடைய ஞானசத்தி கிரியாசத்திகட்கு வியாபகமாகக்கொண்டு தாடலைபோல் அடங்கி நிற்பர் எ—று.

நல்லார் புனைவரெனவே, ஏனையோர்க்கு அது கூடாதென்றவாறாயிற்று.

மூவகைவாழ்த்துள் இது பொருளியல்புரைத்ததெனக் கொள்க.

அருளிய வென்பது செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சம்: அது புனைவரென்னும் பிறவினை முதல்வினை கொண்டது.

இல்லார் இல்லாகச் செய்தாரெனப் பண்படியிற் பிறந்த வினைப்பெயர்.

அருளிய பொல்லாரெனப் பெயரெச்சமுடிபாக வைத்துரைப்பினுமமையும்.

மலைவில்லாருளைப் பொல்லார்தாள் புனைவரெனவே, அவ்விருவருந் தம்முள் வேற்றுமையின்மை பெற்றாம். உலகத்துப் புதல்வர் கண்மாட்டுச் செய்யும் வழிபாடு தந்தையர்க்குக் கழிபேருவகை பயப்பிக்குமாகலின், அந்நயம் பற்றி அங்ஙனங்கூறிய தூஉமாம்.

**மங்கலவாழ்த்து முடிந்தது.**

*திருச்சிற்றம்பலம்.*

---

## அவையடக்கம்.

---

தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வா
ரெம்மை யுடைமை யெமையிகழார் — தம்மை
யுணரா ருணரா ருடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்.

இஃது அவையடக்கங் கூறுமுகத்தானே ஈண்டெடுக்துக்கொண்ட சித்தாந்தசைவத்தி னுயர்வும் ஏனைச்சமயத்தார்களதிழிபுங் கூறுகின்றது.

(இ—ள்.) தம்மை உணர்ந்து தமை உடைய தன் உணர்வார். எ—து. உடைப்பொருளாகிய தம்மியல்பினை உணர்ந்து தம்மையுடையானாகிய தலைவனை யுணருஞ் சித்தாந்த சைவர், — எம்மை உடைமை எமை இகழார். எ—து. தமக்குடைப்பொருளாகிய எம்மையுடையராகலின், எம்மைக் குற்றங்கணிக்கிக் குணங்கொண்டு கோதாட்டுவதன்றி இகழ்தல்செய்யார்; ஆகலான் எம்மாற் செய்யப்படுநூலையும் அவ்வாறு கைக்கொள்வர், —தம்மை உணரார் உணரார் எ—து. அங்ஙனந் தம்மை யுணராதார் தம்மையுடையானாகிய தலைவனையு முணரார் ஆகலான், —உடங்கு இயைந்து தம்மிற் புணராமை எ—து. அவர் ஒருங்கே குழீஇக்கொண்டு தம்மிற்றாமே

சோராது மூரணுதலால்,—புறன் கேளாம் எ—து. அவர் எம்மையும் எம்மாற் செய்யப்படு நூலையும் இகழ்ந்துரைக்கும் மொழியை யாம் பொருளாகக் கொள்ளாம் எ—று.

ஆதலான், எம்மாற்செய்யப்படுநூலையும் அவ்வாறு கைக்கொள்வ ரென்பது குறிப்பெச்சம்.

தன்னையென்னும் இரண்டனுருபு விகாரத்தாற்றொக்கது.

உடைமை புணராமை என்புழி இன்னுருபும் ஆனுருபும் விரித்துரைக்க.

'தம்மையுணரா'ரெனப் பொதுப்படக் கூறுதலானே, தாமொரு பொருளுண்டென்பதே உணராத உலோகாயதரும், தம்மைக் குணிப்பொருளென்றுணராத புத்தர் சாங்கியர் மாயாவாதிகளும், தம்மை முதல்வனுக்கு உடைப்பொருளென்றுணராத ஏனைச்சமயத் தாரும் அடங்குவர். பாஞ்சராத்திரிகளும் சிவாத்துவித சைவரும், தம்மை உடைப்பொருளெனக் கொள்ளினும், அவருட் பாஞ்சராத் திரிகள் உடைப்பொருளாகிய தமக்கு அணுபரிமாணங் கோடலா னும், உடையானுக்குப் பரிணமங்கூறுதலானும், உடையானல்லா தானை உடையானென மயங்கிக்கோடலானும்; சிவாத்துவிதசைவர் உடையானது சிற்சத்திக்குப் பரிணமங் கூறுதலானும், பிறவாற்றா னும் அவருந் தம்மை உணராரே யென்பது.

புறன் புறச்சமயம்பற்றி இகழ்ந்துரைக்கு மொழியும், புறங் கூற்றுமொழியு மென்பது இரட்டுறமொழித லென்னு முத்தியாற் கொள்க. புறங்கூற்றுமொழியாவது முக்கூற்றுப் புறச்சமயங்களின் வேறான பாடாணவாதசைவர் முதலியோர் முன்னன்றிப் புறத்தே இகழ்ந்து கூறு மொழி யென்க.

**அவையடக்கம் முடிந்தது.**

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

# சிவஞானபோதம் — சிற்றுரை.

## பொதுவியல்பு — பிரமாணவியல்.

# முதற்சூத்திரம்.

—ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பொதுவியல்பு.

## பிரமாணவியல்.

### முதற்சூத்திரம்.

ஈண்டு ஆசிரியர், முதனூலிற் கூறியவாறே சிவாகமங்களினோதப்படும் ஞானபாகப் பொருளெல்லாவற்றையும் பொது உண்மையென்று இரண்டாகத்தொகுத்து, பிரமாணவியல் இலக்கணவியல் சாதனவியல் பயனியலென நால்வகைப்படுத்து, பிரமாணவியல் மூன்று பாதத்தாற் கூறுவான் றொடங்கி, முதற்கண் உலகிற்கு முதற் கடவுள் சிறப்புவகையானுண்டென்னும் ஆகமப்பிரமாணத்தை வலியுறுத்துவதாய அநுமானப் பிரமாணங் கூறுகின்றார்.

**அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்**
**றோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதா**
**மந்த மாதி யென்மனார் புலவர்.**

எ—து. சூ—ம். எ—னின். சங்காரகாரணனாயுள்ள முதலையே முதலாகவுடைத்து இவ்வுலகம் என்பதுணர்த்துத னுதலிற்று.

இது சூத்திரக்கருத்துரைக்கின்றது. இ—ள். நிவிர்த்திகலை முதலிய பஞ்சகலைகளுட்பட்ட ஐவகைச் சங்காரத்துள் இறுதிக்

கண்ணதாகிய மாசங்காரத்தைச் செய்யும் வினைமுதலா யுள்ள முதல்வனையே தனக்கு முதற்கடவுளாக வுடைத்து அவனவளது வென்று இவ்வாறு சுட்டியுணரப்படுவதாய உலகம் என வேதாகமங் களுட் கூறப்படுவதனை அநுமான வளவையா னுணர்த்துதலைக் கரு திற்று இச்சூத்திரம். எ—று.

ஏகாரம், இயைபின்மை நீக்குதற்கும், பிறிதினியைபு நீக்கு தற்கும் பொதுவாய்நின்ற பிரிநிலை.

இதன் பொழிப்பு உரைத்துக் கொள்க.

இஃது இவ்வுரைமுகத்துக் கேட்போரால் உரைவகைபற்றிச் செய்துகோடற்பாலதொன்றனை அறிவுறுத்துகின்றது. இ—ள். இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு முன்னர்க் கண்ணழித்துரைக் கும் பொழிப்புரைபற்றி உரைத்துக்கொள்க. எ—று.

எனவே, இங்ஙனம் இருவகைப்படும் பொழிப்புரையுட் கண்ண ழித்துக் கடாவிடைகளானுரைக்கும் வார்த்திகமாய பொழிப்புரை மாத்திரையே யாமீண்டுரைக்கின்றும்; பிண்டமாகக் கொண்டுரைப்ப தாய பொழிப்புரை இதுபற்றி யுணர்ந்து கோடல் எளிதாகலின், அஃதியா முரைக்கின்றிலம் என உரைமுகத்து மாணக்கர்க்கு அறி வுறுத்தவாறாயிற்று.

இஃது, ஏனைச்சூத்திரங்களினும் உய்த்துக்கொண்டுணர்தற் பொருட்டு, முதற்கண் வைக்கப்பட்டது.

இவ்வாறு ஆசிரியர் ஆணைதந்தமையின், கண்ணழித்துரைபற் றிச் சூத்திரத்திற்குப் பதப்பொருள் கூறுதும். அவன் அவள் அது எனும் அவை—புலவர் எது. அவனென்றும் அவளென்றும் அதுவென்றும் இவ்வாறு பகுத்துப் பலவாய்ச் சுட்டியுணரப்படுஞ் சொல்லும் பொருளுமாய இருகூற்றுப் பிரபஞ்சத்தொகுதி, தோற் றம் நிலை இறுதி யென்னும் முத்தொழிலுடைமையால், ஒருவனற்

ரேற்றப்பட்டதாய உள்பொருளேயாம். அது, தோன்றுங்கால், தாமொடுங்குதற்கு ஏதுவாய் நின்ற கடவுளினின்றும், சகசமல நீங்காமையால், அது நீங்குதற்பொருட்டு மீளத் தோன்றுவதாம். இவ்வாறாகலின், சங்காரத்தொழிலைச் செய்யுங் கடவுளே உலகிற்கு முதற்கடவுள்; ஏனையோர் அன்னரல்லர் எனக் கூறுவர் அளவை நூலுணர்ந்தோர் எ—று.

அவை தொகுதி; சுட்டுப்பெயரெனக்கொள்ளின், உளவெனப் பிரித்துப், பயனிலையாக்கித், தாமென்பதனை அசைநிலையாக வைத்துரைத்து, ஆக்கச்சொல் வருவித்துக்கொள்க.

வினைமை வினையுடைமை.

தோன்றிய வென்றது தோற்றிய வெனப் பிறவினை வாய்பாட்டானின்றதலின், அதற்குரிய வினைமுதல் அவாய்நிலையான் வந்தது. தோற்றிய வென்னும் பெயரெச்சந் திதியென்னுஞ் செயப்படுபொருட்பெயர் கொண்டது. திதியா யொருவனாற் றோற்றப்பட்டதென்பார் தோற்றிய திதி யென்றார். திதியென்றது ஈண்டு உள்பொருளென்னுந்துணையாய் நின்றது.

மூவினை யுடைமையால் உள்பொருளாதலும், அவ்விரண்டு முடைமையால் நிமித்தகாரணனை யுடைத்தாதலுந் துணியப்படுமென்பார், 'மூவினைமையிற் றோற்றிய' திதி யென்றார்.

ஏகாரந் தேற்றம். ஒடுங்கி யென்பது பெயர் உருபுகள் தொக்குநின்றன.

அந்தத்தைச் செய்யுங் கடவுளை அந்தமென்றது உபசாரம்.

காணப்பட்ட வுலகாற் காணப்படாத கடவுட் குண்மை கூற வேண்டுதலின், தோற்றிய திதியே யெனவும், ஒடுங்கி யுளதாமென வும், உலகின்மேல்வைத்துக் கூறினார். கருத்துரையுட் கூறியதும் அது நோக்கி.

இச்சூத்திரத்துள், அவனவளதுவெனு மவை மூவினைமையின் என்பது ஓரதிகாரணம்; தோற்றிய திதியே யொடுங்கி யுளதாம் என்பது மூன்றதிகாரணத்தை யுள்ளடக்கி நிற்பதோரதிகாரணம்; அந்தமாதி யென்மனார் புலவர் என்பது ஓரதிகாரணம்; ஆக முக்கூற்றது இச்சூத்திர மென்றுணர்க. இம்மூன்றும் முறையே ஒன்றற்கொன்றேதுவும் பயனுமாய் ஒரு பொருண்மேல் வருதலின் ஒரு சூத்திரத்தாற் கூறினார். தன்னாற் கூறப்படும் பொருளும், அதன்கணையப்பாடும், அதற்குப் பிறர் கூறும் பக்கமும், அதனை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிவும், இயைபு மென்னும் இவற்றது நிலைக்களம் ஈண்டதிகாரண மெனப்படும்.

---

## முதலதிகாரணம்.

ஈண்டு உளதாய் ஒருவன் ஒருத்தி ஒன்று என்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசமுடைத்து என்றது.

எ—து. மே—ள். எ—னின். மூவினை யுடைத்தோ அன்றோ வென்னும் ஐயப்பாட்டின்கண் நித்தமாய்க் காணப்படும் பிரபஞ்சத்தை மூவினையுடைத்தென்றல் பொருந்தாது என மீமாஞ்சகரும் உலோகாயதருங் கூறுங் கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று. இ—ள். வெ—டை.

ஒருவனென்றும் ஒருத்தியென்றும் ஒன்றென்றும் இவ்வாறு அவயவப்பகுப்புடைத்தாயும் பலவேறு வகைத்தாய்ச் சடமாயுஞ் சுட்டியறியப்படுவதாயு மிருத்தலின் இம்மூன்றேதுவானும் பிரபஞ்சந் தோன்றி நின்றழியு மென்பது துணியப்படு மென்பார்

'உளதாயொருவ னொருத்தி யொன்றென்று சுட்டப்பட்ட பிரபஞ்ச' மென உடம்பொடு புணர்த்தோதினர்.

உளதாய்ச்சுட்டப்பட்ட வென வியையும். உளதாகச் சுட்டப் படுதல் முயற்கோடு முதலியன போலத் திரிவையங்களா னன்றி மெய்யாகச் சுட்டப்படுதல்.

தோற்றமும் ஈறும் உள்ள தன்பாலே கிடத்தலின்.

எ—து. எது. எ—னின். காட்சியளவைக்கு எய்தாதுரைப் பனவெல்லாம் பிரமாணமாகா வென உலோகாயதர் கூறுங் கடாவை யாசங்கித்துக் காட்சியளவை பற்றியும் மேற்கோளைச் சாதித்தனுத லிற்று. இ—ள். உற்பத்தியும் நாசமுங் காணப்பட்ட திதியின் பக்கத்தே காணக் கிடத்தலின் 'உளதா யொருவ னொருத்தி யொன் றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசமுடைத்து' என மேற்கொண்டது. எ—று.

**பூதாதி யீறு முதலுந் துணையாகப்**
**பேதாய் திதியாகும் பெற்றிமையி—னோதாரோ**
**வொன்றொன்றிற் றேன்றி யுளதா யிறக்கண்டு**
**மன்றேன்று முண்டென்ன வாய்ந்து. (1)**

எ—து. உ—ம். எ—னின். உள்ள தன்பால் அவ்விரண்டுங் கிடத்தல் யாங்ஙனம்? என்னுங் கடாவை யாசங்கித்து ஏதுவை வலி யுறுத்துத னுதலிற்று. இ—ள். பேதாய். எ—து காட்சியளவை களானும் அறியப்படாத மடவோனே,—பூதாதி. எ—து. பூத முதற்காரணமாகவுடைய பிரபஞ்சத்திற்கு,— திதி ஈறும் முதலும் துணை ஆக ஆகும். எ—து. திதி நிகழ்வழி, நாசமும் உற்பத்தியுந் தனக்குத் துணைக்காரணமாகக்கொண்டே நிகழா நிற்கும். அற்றாயி னும் ஒன்று தோன்ற ஒன்று நிற்ப ஒன்றழிவதன்றி ஒருங்கே

தோன்றி ஒருங்கே நின்று ஒருங்கே யழியக் கண்டிலமாலெனின்;— ஒன்று ஒன்றின் பெற்றிமையின் தோன்றி உளதாய் இறக் கண்டும். எ — து. ஒவ்வொரு கால விசேடத்திற் சாதிபற்றி ஒருங்கே தோன்றி ஒருங்கே நின்று ஒருங்கே யழிவதனைக் கண்டுவைத்தும்,— என்றும் அன்று உண்டு என்ன ஆய்ந்து ஓதாரோ. எ — து. என்று யினும் அதற்குரிய காலம் வருமென்று உலகத்திற்கும் அங்ஙனமாத லுண்டென்று அக்காட்சிபற்றி ஆராய்ந்து சொல்லார்களோ! உன் னைப்போலும் மடமையில்லாதோர். எ — று.

பூதாதி அன்மொழித்தொகை. பூதத்துக்கு மேலுளவாய தத்துவங்கள் உலோகாயதருக்கு உடம்பாடன்மையின், பூத முத லாய தத்துவங்களென வுரைத்தல் ஈண்டைக்கேலாமையறிக.

பூதாதிக்கென நான்கனுருபு விரித்துரைக்க; அது பின்னருஞ் சென்றியையும். ஆகுமென்பது முற்றுவினை.

ஈண்டுப் பெற்றிமை என்றது சாதியை.

ஓகாரம் எதிர்மறை.

ஒன்றொன்றி னென்பது "ஒன்றொன்றுப் பார்த்துணர்வ துள் ளமே" என்றாற்போல அடுக்குமொழி; அது காலவிசேட மாதல் என்று மன்றெனப் பின்வருதலாற் பெற்றாம்.

ஒருங்கே யென்பது சொல்லெச்சம்.

ஒன்றொன்றிற்றோன்றியுளதாயிறுதலாவது "பயில்வித் தெல் லாங் — காரிட மதனிற் காட்டு மங்குரங் கழியும் வேனில்" (சித்தி. 1 சூ, 9. செய்.) என்பதனானறிக.

"கண்டும்" உம்மை சிறப்பு.

முதலதிகரணம் முடிந்தது.

## இரண்டாமதிகாரணம்.

இனி, இல்லதற்குத் தோற்றமின்மையின் உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின் ஒடுங்கின சங்காரத்தி னல்லது உற்பத்தியில்லையென்றது என விங்ஙனஞ் சொற்பல்காமைப்பொருட்டுத் துணிந்ததாக வைத்துரைத் தாராயினும், பொருளியைபிற்கேற்ப இதனை மூன்றதிகரணமாக வைத்துரைப்பது ஆசிரியர் கருத்தெனக்கொள்க; அஃதாமாறு காட்டுதும்:—

இனி உலகமுள்ளது என்றது.

எ—து. மே—ள். எ—னின். உலகம் இல்பொருளாய்த் தத்தஞ் சார்பிலே தோன்றியழிதல் இயல்பென்றலே அமைவுடைமையின், அது மூவினையுடைத்தாயினும் தோற்றுவாயொருவனையுடைத்தாதல் செல்லாது எனப் புத்தநூலார் சொல்லுங் கடாவை யாசங்கித்துத் திதியென்னுஞ் சூத்திரக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இ—ள். வெ—டை.

இல்லதற்குத் தோற்ற மின்மையின்.

எ—து. ஏது. எ—னின். உள்ளதாதல் யாங்ஙனம்? என்னுங் கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்த னுதலிற்று. இ—ள். இல்பொருளாகிய முயற்கோட்டிற்கு முக்காலத்து முற்பத்தியின்மையின் ஈண்டுற்பத்தி காணப்படுதலான் 'உலகமுள்ளது' என மேற்கொண்டது. எ—று.

இனி உலகஞ் செய்வோனை யுடைத்து என்றது.

எ—து. மே—ள். எ—னின். உள்பொருளெனப்பட்ட பிரபஞ்சம் தத்தமுதற் காரணத்தினின்றுந் தானே தோன்றி யழியும் இதற்கொரு நிமித்தகாரணமாய் ஒரு கருத்தா வேண்டாம் எனச்

சாங்கியர்கூறுங் கடாவை யாசங்கித்துத் 'தோற்றிய'வென்னுஞ் சூத்திரக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று இ-ள் வெ—டை.

உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினை யின்மையின்.

எ—து. எது. எ—னின். அதற்குப் பிரமாண மென்னை? என்னுங் கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்த னுதலிற்று. இ—ள். மண் முதலியவற்றி னுள்ளதாகிய கட முதலிய பொருட்குக் குயவன் முதலிய செய்வோரையின்றி வினைதன் முதலிய செய்தொழில் நிகழாமையின், உலகம் இவ்வியல்பிற்றாகலான் 'இனி யிவ்வுலகஞ்' செய்வோனை யுடைத்து என மேற்கொண்டது. எ—று.

இனி ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தி யில்லை யென்றது.

எ—து. மே—ள். எ—னின். இத்துணையுங் கூறியவாற்றான் உலகத்தைத் தோற்றுவிப்பான் உண்டெனப்பட்ட கருத்தாத் திதிகருத்தா சிருட்டிகருத்தா முதலியோரில் ஒருவனேயாதலமையும் எனப் பாஞ்சராத்திரி முதலியோர் கூறுங் கடாவை யாசங்கித்து 'ஒடுங்கியுளதா' மென்னுஞ் சூத்திரக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இ—ள். உலகம் தாமொடுங்குதற்கு நிலைக்களமான சங்காரகருத்தாவி னின்றன்றி உளதாகாது. எ—று.

ஒடுங்கினவென்னும் பெயரெச்சஞ் சங்காரமென்னும் இடப்பெயரோடு முடிந்தது. சங்காரம் ஆகுபெயர்.

அல்லதில்லை என்று எதிர்மறை முகத்தாற் கூறியது, வினைக்கடவுளரின் உளதாகாமை யாப்புறுத்தற்பொருட்டு.

இதனுள் ஒடுங்கின என்பதனாற் போந்த குறிப்பேதுவைப் புலப்படக்காணுமாறு:—

ஆண்டு ஒடுங்குதலின்.

எ—து. ஏது. எ—னின். அதற்குப் பிரமாணமென்னே? என்னுங் கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்த னுதலிற்று. இ—ள். யாது யாண்டொடுங்கும் அஃததனி லுற்பத்தியாம் மண்ணிற் குடம் போலும் என்னும் அவினுபாவத்தாற் பிரபஞ்சஞ் சங்காரகாரணன்மாட் டொடுங்குதலின் மீளத் தோன்றுங்கால் ஆண்டுநின்றுந் தோன்றுதலே பொருத்த முடைமையின் அவ்வாறு மேற்கொண்டது. எ—று.

இவ்வாறு மூன்றதிகாரணப்பொருளும் இதன்கட் போந்தவாறும் இவ்வா றுரையாக்காற் பொருளியைபு படாமையும் நுண்ணுணர்வாற் கண்டு கொள்க.

இலயித்த தன்னிலில யித்ததாம லத்தா
லிலயித்த வாறுளதா வேண்டும் —

எ—து. உ—ம். எ—னின். உலகம் உள்ளதாயின் உள்ளதற்கு உண்டாகவேண்டுவதில்லையாகலாற் சற்காரியவாதம் அடாது எனப் புத்தர்கூறுங்'கடாவை யாசங்கித்து'இல்லதற்குத்தோற்றமின்மையி னென்ற வேதுவை வலியுறுத்துத னுதலிற்று. இ—ள். இலயித்தது இலயித்த தன்னில் ஆம். எ—து. உள்ளதாயினுஞ் சங்காரகாலத்தி னொடுங்கிய தாகலான் அவ்வொடுங்கிய வுலகம் தானொடுங்குதற்கு நிலைக்களமான சங்காரகருத்தாவினின்றும் படைப்புக்காலத்தின் மீள வுளதாம். அற்றேல் ஒடுங்கியது ஒடுங்கியவாறே யொழியாது மீளவுண்டாக வேண்டாம்: வேண்டுமாயின், முன்னொடுங்காது நிலைபெறவே யமையும்: அவ்வாறன்றி ஒடுங்கி மீள வுளதாவது எற்றுக்கெனின்;—மலத்தால். எ—து. உள்ளதாகிய உலகம் கருமமலம் பரிபாகமாதற்பொருட்டு ஒடுங்கி, ஆணவமலம் பரிபாகமாதற்பொருட்டு மீளவு முண்டாம். அற்றேல், முன்னின்ற பிரபஞ்சம் நாசமாக வேறு தோன்று மென்னுமல் அதுவே ஒடுங்கி நின்று

மீளவுளதா மென்றற்குப் பிரமாணம் என்னை? யெனின்;—இலயித்த வாறு உளது ஆ வேண்டும். எ—து. எஃதெவ்வாறு நின்றொடுங் கிற்று அஃதவ்வொடுங்கியவாறே உளதாதல் எல்லாரானும் விரும் பப்படும். எ—று.

எனவே, அந்நியம மில்லையாயின் நெற் கமுகாய் நீளாது நெல் லாய் நீளுதற்கு ஏது வென்னை? யென்னுந் தருக்கமே அதனை யறிவு றுத்து மென்றவாறாயிற்று. சற்காரியவாதத்தி னியல்பு "தந்து முதல் காரகம்"என்னும் ஞானாமிர்தத்தினுங் (அகவ-15.) காண்க

இதனானே, இல்லது முள்ளது மல்லாத பொருடொன்று மென்னுஞ் சூனியவாதிகளும், இல்லது முள்ளது மாய பொரு டொன்று மென்னும் அநேகாந்தவாதிகளும் மறுக்கப்பட்ட வாறறிக.

இலயித்த
தத்திதியி லென்னி னழியா தவையழிவ
தத்திதியு மாதியுமா மங்கு (2)

எ—து. உ—ம். எ—னின். இனிச் சற்காரியவாதத்தின் அவ்வக்காரியங்கள் தத்த முதற்காரணத்தொடுங்கு மெனவே கோட லின் உலகிற்கு முதற்காரணமாகிய மூலப்பகுதி வாசுதேவனுரு வாகலான் உலகம் அவன்மாட்டொடுங்கு மென்றலே அமைவுடைத் தன்றி முதற்காரணத்தின் வேறாய நிமித்தகாரணமெனக்கொண்ட சங்காரகருத்தாவின் மாட்டொடுங்கு மென்றல் பொருந்தாதெனப் பாஞ்சராத்திரிகள் கூறுங்கடாவை யாசங்கித்து 'ஒடுங்கின சங்காரத் தின்' எனவும் 'இலயித்த தன்னில்' எனவுங் கூறிப்போந்த குறிப்பே துவை வலியுறுத்துத னுதலிற்று. இ—ள். இலயித்தது அத்திதி யில் என்னின். எ—து. உலக மொடுங்கியது அந்த மூலப்பகுதி வடி வாய திதிகருத்தாவின்க ணென்பையாயின்,— அவை அழியாது. எ—து. நீ அங்ஙனங் கொள்ளினும் மூலப்பகுதிக்கு மேலுள்ள புவ

னங்கள் அதனுல் வியாபிக்கப்படாமையிற் கீழுள்ள ஏகதேச மாத்திரையே ஆண்டொடுங்குவதன்றி மாயாகாரியத்தொகுதி முழுவதும் ஆண்டொடுங்காது. அற்றேல், மாயாகாரியத்தொகுதி முழுவதும் யாண்டொடுங்குவதெனின்,—அத்திதியும் ஆதியும் ஆம் அங்கு அழிவது. எ—து. அந்தத் திதிக்கடவுளும் படைப்புக்கடவுளும் தோன்றுதற்குக் காரணமாகிய அச்சங்காரக் கடவுளிடத்தே அவ்விருவரோடுங்கூட அழிவதாம் அத்தொகுதி. எ—று.

இவ் வெண்பாவினைச் "செய்யுட்க ளோசை சிதையுங்கா லீரளபு—மையப்பா டின்றி யடையுமா—மைதீரொற், றின்றியுஞ் செய்யுட் கெடினொற்றை யுண்டாக்கு — குன்றுமே லொற்றளபுங் கொள்" என்பதுபோல இரண்டதிகரணப் பொருள்படுமாறு இருதொடராக வைத்துரையாக்காற் பொருளியையுபடாமை யறிக.

இலயித்த வென்னும் பெயரெச்சம் தன்னென்னும் இடப்பெயரோடு முடிந்தது.

இலயித்தவென்றது எதுப்பொருண்மை யுணர நின்ற பெயர். இலயித்தவெனச் சற்காரியவாதங் கூறவே இலயித்த வவத்தையின் அவ்வக் காரியசத்தி சமூகமாய்ச் சூக்குமமாய் நிற்பதொன் றுண்டு. அதுவே முதற்காரணமெனப் பிரபஞ்சத்திற்கு முதற்காரணமாகிய மாயை யுண்மையும் பெறப்பட்டது.

ஆவென்பது முதனிலைத்தொழிற்பெயர். வேண்டு மெனச் செயப்படுபொருளைச் செய்ததுபோலக் கூறினர்.

அவை தொகுதி; அஃறிணைப் பன்மைப்பெய ரென்பார்க்கு அழியாது அழிவதென்னும் ஒருமைகளோடியையாமையும் உத்தரமாகாமையு முணர்க.

திதியும் ஆதியும் ஆகுபெயர். ஆமங்கு பெயரெச்சமுடிபு.

இரணியகருப்ப மதத்தையும் மறுத்தற்பொருட்டுப் படைப்புக் கடவுளையும் உடன்கூறினர்.

நிமித்தகாரணனுகிய முதல்வன் உலகிற்கு முதற்காரண னல்லனுயினும் முதற்காரணமாகிய மாயைக்கு ஆதாரமாய் நிற்ற லின், உலகம் ஆண்டொடுங்கி ஆண்டுநின்று தோன்றுதல் அமையு மென்பது வருகின்ற வெண்பாவிற் பெறப்படும்

வித்துண்டா மூல முளைத்தவா தாரகமா
மத்தன்ரு ணிற்ற லவர்வினையால்—வித்தகமாம்
வேட்டுவனு மப்புழப்போல் வேண்டுருவைத் தான் [கொடுத்துக்
கூட்டானே மண்போற் குளிர்ந்து. (3)

எ—து. உ—ம். எ—னின். உலகந் தனக்கு முதற்காரணமாகிய மாயையி னெடுங்குவதன்றி நிமித்தகாரணன் ஒருவனுண்டெனக் கொள்ளினும் அவன்மாட் டொடுங்கு மென்றல் பொருந்தாமையின், யாது யாண்டொடுங்கும் அஃததனிலுற்பத்தியாம் என்னும் அவிநா பாவத்தான் மாயையினெடுங்கிய உலகத்தை மாயையே தோற்று விக்கும் இதற்கோ ரிறைவன் வேண்டா எனச் சாங்கியநூலார் மதம்பற்றி நிகழுங்கடாவை யாசங்கித்து உள்ளதற்குச் செய்வோ ரின்றிச் செய்வினையின்மையின் என்னு மேதுவை வலியுறுத்து தனு தலிற்று.

இ—ள். மண்போல் குளிர்ந்து வித்து உண்டா மூலம் முளைத்தவா தாரகம் ஆம் அத்தன் தாள் நிற்றல் அவர் வினையால் வித்தகம் ஆம். எ—து. மாயையும் உலகமும் வித்தும் அங்குர மும் போலுமாகலின் வித்துக்கு ஆதாரமாகிய நிலங் குளிர்ந்தவழி அதன்கண் வித்துள்ளதாக அதனினின்றும் அங்குரந் தோன்றிய வாறுபோல மேலைவெண்பாவின் இலயித்தது என்றதனுற் பெறப் பட்ட மாயை தனக்காதாரமாய் நின்று தோற்றுவிக்கும் இறைவ னது சத்தியின்க ணுள்ளதாய் நிற்றலால் அச்சத்தி சங்கற்பித்த வழி அவரவர் வினைக்கீடாக அவ்வக்காரியங்களை அவ்வவ்வியல்பிற்

பிறழாமற் பயக்குஞ் சதுரப்பாடுடைத்தாம்: அல்லுழி உடைத்தன்று. நிலங் குளிர்ந்தவழி அதன்கட் கிடந்தன்றி வித்து முளையைத் தோற்றுதவாறுபோலும். ஆகலான், மாயையினொடுங்கித் தோன்றிய உலகம் அதற்காதாரமாய் நின்ற இறைவன் சத்தியினொடுங்கித் தோன்றியதேயாம். எ — று.

ஆகலானென்பது முதல் குறிப்பெச்சம். இது கிழங்கினின்றுந் தோன்றிய தாமரையைப் பங்கயமென்பதனானுமறிக. வழிநூலாசிரியர் "உயிரவை யொடுங்கிப் பின்னு முதிப்பதெ னான்பால்." எ—ம். "உலகவ னுருவிற் றோன்றி யொடுங்கிடும்." எ—ம். (சித்தி—1—32; 1—48) ஓதியதூஉம், உலகவ னுருவிற் றோன்றி யொடுங்குமாறு வாதுளாகமத்தில் வகுத்தோதியதூஉம் இவ்வியல்பு நோக்கி யென்க. இஃதறியாதார் இன்னோரன்னவற்றைத் தத்தமக்கு வேண்டிய வாறே யுரைப்ப.

உவமவினை பொருளினும் பொருளடை உவமையினுஞ் சென்றியையும்.

உண்டாகவெனச் சற்காரியத்தை வலியுறுத்துதல், வித்தில் வழி நிலத்தினின்றும் அங்குரந் தோன்றுதவாறு போல, மாயையில் வழிப் பிரமத்தினின்றும் உலகந் தோன்றுமெதனப் பரிணாமவாதிகளையும், மாயை அநிர்வசனமென்னும் மாயாவாதிகளையும், வித்துநிலனும்போலென்றதனான் மாயை முதல்வனின் வேறுபொருளன்றென்னுஞ் சிவாத்துவிதசைவர் பாஞ்சராத்திரிகளையும், மறுத்தவாறாயிற்று.

முதல்வன் பலவேறு வகைப்படச் சங்கற்பித்தவா றென்னை? என்னுங்கடாவை யாசங்கித்து, அவர் வினையா லென்றார்.

வித்தகம் விசித்திரமென் றுரைப்பினு மமையும்.

அற்றேல், தன்வயத்தானன்றி வினைவயத்தாற் றோற்றுவிப்பான் இறைவ னாகானெனின்:—

வேட்டுவன் ஆம் அப்புழுப்போல் வேண்டு உருவைத் தான் கொடுத்துக் கூட்டானே. எ—து. வேட்டுவனுதலை விரும்பும் புழுவிற்கு வேட்டுவன் விரும்பிய வடிவினைக் கொடுக்குமாறு போல, இறைவனும் அவரவர் வேண்டு முருவினைக்கொடுத்து அவ்வினைக்குத் தக்க பயன்களையுங் கூட்டுவனுகலான்; அதுகொண்டு சுதந்திரத்திற் கிழுக்கென்னை. எ—று.

ஆகலான் அதுகொண்டு சுதந்திரத்திற் கிழுக்கென்னை யென்பது குறிப்பெச்சம்.

போல் அசை. குளிர்ந்தவழியென்பது குளிர்ந்தெனத் திரிந்து நின்றது.

நிற்றலினென்னும் ஐந்தாவது விகாரத்தாற்ருெக்கது. எகாரம் எதிர்மறை.

நோக்காது நோக்கி நொடித்தன்றே காலத்திற்
ருக்காது நின்றுளத்திற் கண்டிறைவ—ளுக்காதே
கண்ட நனவுணர்விற் கண்ட கனவுணரக்
கண்டவனி லிற்றின்ருங் கட்டு. (4)

எ—து. உ—ம். எ—னின். மேலையுதாரணத்திற்கூறியவாற்ருன் உலகிற்கு முதற்கடவுள் உண்டெனக்கொள்ளினும் அவன் படைப்பு முதலியன தொழில் செய்வாளுயின் விகாரமெய்தி அதனிற் பந்தமுறுவா னென்னுமவர் மதம்பற்றி நிகழுங் கடாவை யாசங்கித்து ஏதுவை வலியுறுத்துதனுதலிற்று. இ—ள் இறைவன். எ—து. முதல்வன்,— காலத்தில் தாக்காது நின்று. எ—து. இறப்பு நிகழ்வு எதிர்வு முதலியனவாய் வேறுபட்டு எல்லாத்தொழிலுஞ்செய்துந் தனக்கு விகாரமின்றி நிற்குங் காலம்போல விகாரப்படாது நின்று, —ஆக்காதே கண்டு. எ—து. பிரபஞ்சத்தைக் காரணத்தாற்படையாது சங்கற்பமாத்திரத்தானே படைத்து,—நோக்காது நோக்கி நொடித்து. எ—து. அவ்வாறே காவாது காத்து அழியாதழித்தலால்,

—இன்று ஆம் கட்டு. எ—து. இவ்வமலனுக்கும் பந்தமின்றாதல்,—உளத்தில் கண்டநனவு உணர்வில் கண்ட கனவு உணரக்கண்டவனில் இற்று. எ—து. கற்றநூற் சொல்லும் பொருளும் உள்ளத்திற் றோன்றுங்கால் உள்ளம் அவற்றிற் றொடக்குண்ணாதவாறு போலும்; கனவின்கட் கண்டவற்றைப் புறத்து விடயங்களை யறிந்து வந்த நனவுணர்வின் கண்ணே விளங்க வறிந்தவன் அப்பொழுது அவற்றிற் றொடக்குண்ணாதவாறு போலு மித்தன்மைத்து. எ—று.

எனவே, இஃதிவ்வாறாக வென்றெண்ணுதலாகிய சங்கற்ப மாத்திரையாற் செய்வதூஉம், கரணத்தாற் செய்வதூஉமென வினைமுதல் இருவகைப்படுமென்பதூஉம் கரணத்தானன்றிச் செய்ய மாட்டாத குயவன் முதலியோர் சங்கற்பமாத்திரையாற் செய்யு முதல்வனுக்கு வினைமுதலாதற் பொதுமைபற்றி, ஒரு புடை யுவமையாதலன்றி முற்றுவமையாதல் செல்லாமையானும், சங்கற்ப மாத்திரையாற் செய்யுஞ் செய்திக்குக் கட்டுண்டன் முதலிய குற்றங்கள் பகைப் பொருளாகலானும் அவை ஆண்டுளவாதற்கோ ரியைபின் றென்பதூஉம் கூறி ஏதுவை வலியுறுத்தவாறு காண்க.

ஆக்குதல் படைத்தல்; காண்டலும் அது. நோக்குதல் காத்தல்; நொடித்தல் அழித்தல்; அது "நொடித்தான் மலை" என்பதனானுமறிக.

ஆக்காது நோக்காது என்றமையால், நொடியாதென்பது வருவித்துரைக்கப்பட்டது. நொடித்தலாமென்பது நொடித்தெனத் திரிந்தது.

அன்றே அசை; அநாதியே யெனினு மமையும்.

இன்மூன்றும் உவமவுருபுகள்.

உளத்தி னென்பதற்குச் சங்கற்பத்தாலென் றுரைப்பினுமமையும்.

இன்றாங்கட்டு என்பது "அருங்கேடன்" குறள்—210. என்பது போல நின்றது.

இரண்டாமதிகரணம் முடிந்தது.

---

## மூன்றுமதிகாரணம்.

இனிச் சங்காரமே முதலென்றது.

எ—து. மே—ள். எ—னின். 'ஒடுங்கின சங்காரத்தினல்ல துற்பத்தியில்லை' எனவே சங்காரகருத்தா உலகிற்கு முதற்கடவுளென்பது போந்ததாயினும் தேர் முதலாயின பலர்கூடிச் செய்யக் காண்டலின் அவற்றினும் அதிவிசித்திரமான உலகத்திற்கு மற்றுமத்தன்மையராய முதற்கடவுளர் உண்டெனக் கோடும் என்னும் அநேகேசுரவாதிகண் முதலியோர்மதம்பற்றி நிகழுங்கடாவை யாசங்கித்து 'அந்தமாதி' என்னுஞ் சூத்திரக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று. இ—ள். சங்காரகருத்தா ஒருவனே உலகிற்கு முதற்கடவுளென்றது. எ—று.

சங்காரம் ஆகுபெயர். ஏனையோர் முதல்வராகாரெனப் பிரித்தமையின் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

சுட்டுணர்வாகிய பிரபஞ்சஞ் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரத்தின் வழி யல்லது சுதந்திரமின்றி நிற்றலான்.

எ-து. ஏது. எ-னின். அதற்குப் பிரமாணமென்னை? யென்னுங் கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று. இ—ள். ஒன்றொன்றாய்ச் சுட்டியறிவதாகிய உருவும் அருவுமென்றிருவேறு வகைப்பட்ட பிரபஞ்சம் அவ்வாறு சுட்டியறிதலின்றி எவ்வுலகும் ஒன்றா யறிந்துநின்ற சங்காரகருத்தாவின்வழிப் பாதந்திரமாய் நிற்பதல்லது தனக்கெனச் சுதந்திரமுடைத்தாய் நிற்பதன்றாகலாற், சங்காரகாரணனொருவனே உலகிற்கு முதற்கடவுளன்றி ஏனையோர் முதற்கடவுள ரல்லரென மேற்கொண்டது. எ—று. பிரபஞ்சத்திற்குச் சுதந்திரமின்மையுஞ் சங்காரகாரணனுக்குச் சுதந்திர முண்மையும் ஏதுமுகத்தாற்காட்டுவார், சுட்டுணர்வாகியபிரபஞ்ச

மெனவும், சுட்டுணர்வின்றிநின்றசங்காரமெனவும் ஈரிடத்தும் உடம் பொடுபுணர்த் தோதினர். சுட்டுணர்வுடையதனைச் சுட்டுணர்வென் றது உபசாரம்.

ஈண்டுப் பிரபஞ்சமென்றது சேதனப் பிரபஞ்சத்தை; பிரி நிலையேகாரத்தான் விலக்குதற்குரியது அதுவேயாகலின்.

தேர்முதலாயின பலராற் செய்யப்படினும் அப்பலரும் ஒரு வனேவல்வழி நின்றே செய்ப வாகலானும், வேதத்துட் காரண வாக்கியங்களிற் சுட்டுணர்வினராகிய நாராயணன் இரணியகருப்பன் இந்திரன் அங்கி சூரியன் முதலியோரைக் காரணமென்றது குயவன் போல் அவாந்தர காரணமாதல் பற்றியே யாகலின், அவையெல்லாம் ஆகுபெயராற் சங்காரகாரணனாகிய முதற்கடவுளையே யுணர்த்தி நிற்குமாகலானும், செய்துஞ் செய்வித்தும் எல்லாத்தொழிற்கும் வினைமுதலாய் நிற்கு முதற்கடவுள் சங்காரகருத்தா வொருவனே யென்பது கருத்து.

ஒன்றலா வொன்று ளுளதாகி நின்றவா
றொன்றலா வொன்றிலவை யீறுத—லொன்றலா
வீறே முதலதனி னீறலா வொன்றுபல
வாறே தொழும்பாகு மங்கு. (5)

எ—து. உ—ம். எ—னின். அங்ஙனமாயினும் சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் பலவாயினாற்போலச் சுட்டுணர்வின்றிநின்ற சங்காரமும் பலவுளவெனக் கோடும்; ஒன்றே யென்றற்குப் பிரமாண மென்னை? யென்னுங்கடாவை யாசங்கித்து எதுவை வலியுறுத்துத னுதலிற்று. இ—ள். அவை. எ—து. சேதனப்பிரபஞ்சத்தொகுதி,—ஒன்று அலா ஒன்றால். எ—து. உருவும் அருவுமென்னும் அவ்விருகூற்றுப் பிரபஞ் சத்துள் ஒன்றல்லாத ஒப்பற்ற பரம்பொருளாலே,—உளது ஆகி நின்றவாறு. எ—து. சிருட்டிப்பட்டுத் திதிப்பட்டவாறே, — ஒன்று

அலா ஒன்றில் ஈறுதல். எ—து. அந்தப்பரம்பொருளின்கண்ணே சங்காரப்படுதலால்,— ஒன்று அலா ஈறே முதல். எ—து. அச்சங் காரக்கடவுளொருவனே உலகிற்கு முதற்கடவுள். அற்றேல், இவ் வாறு முத்தொழிற்படுஞ் சேதனப்பிரபஞ்சம் வீடுபெற்றவழிச் சுட்டு ணர்வின்றிச் சிவசமமாமென வேதத்தும் ஆகமத்தும் ஓதுதலின், அவ்வழி அவையும் முதற்கடவுளா மென்றற்கு இழுக்கென்னை? யெனின்;—அதனில் ஈறு அலா ஒன்று. எ—து. அப்பரம்பொருள் போல் அழிவின்றி நித்தமாய சேதனப்பிரபஞ்சம்,—அங்கு. எ—து. வீடுபேற்றின்கண்ணும்,—பலவாறே தொழும்பு ஆகும். எ—து. பல வாற்றானும் பரம்பொருளுக்கு அடிமையாம். எ—று.

இது சொற்பொருட்பின்வருநிலை.

காரியப்பிரபஞ்சஞ் சடமாகலானும், சேதனப்பிரபஞ்சம் அவிச்சையாற் கட்டுற்றுச் சுட்டுணர்விற்றாய் நிற்றலானும், இவற் றைத் தொழிற்படுத்தற்கு இவற்றின் வேறாய் ஒருமுதற்கடவுளுண் டென்பது பெற்றாம். பெறவே, பிரபஞ்சம் விசித்திரகாரியமாய்க் காணப்படுதலின் இவ்வாறு நடாத்தும் முதற்கடவுள் முற்றுணர்வும் அளாவிலாற்றலும் பேருளுஞ் சுதந்திரமும் முதலிய நிரதிசய குணங்களுடைய னென்பதூஉம் பெறப்பட்டது: படவே, இத் தன்மையனாகிய முதற்கடவு ளொருவனே அமையுமாகலின், வேறு மத்தன்மையருண்டெனக் கொள்ளின் மிகையென்னுங் குற்றமாம். அல்லதூஉம், இலக்கணத்துள் ஒருவாற்றானும் வேற்றுமையில்வழி இலக்கியம் பலவாதல் செல்லாதென்னுங் கருத்தால், ஒன்றலா வொன்று என வரையறுத்தோதினார்.

ஈறே முதலென்றது முடிந்தது முடித்தல். ஈறு ஆகுபெயர்.

இறந்தது தழீஇய வெச்சவும்மை விகாரத்தாற் றொக்கது.

பலவாறுவன: இருணீங்கியவழியுங் கண்ணுக்குக் காட்சி ஞாயிற்றை யின்றியமையாதவாறு போல, மலநீங்கியமுத்தி நிலையி னும் ஆன்மாவுக்கு அறிவு வியஞ்சகமாய் உடனின்றறிவிக்கு முதல்

